இதுவுமது.

4. யானையையும் கொல்லும் எளிதே புனன் முதலை
ஏனையிடம் நாய்க்கும் இகல்சாயும்—ஆனதனால்
மானவலி ஒன்று மதித்திடு நீ யார் யார்க்கும்
தானவலி ஒன்று தனி.

(இ-ள்.) முதலையானது ஜலத்தில் யானையைக்கூடக் கொல்லவல்லதாகும். அச்சலத்தை விட்டுக் கரைக்கு வருமாயின் நாயோடுகூடச் சண்டை செய்யமாட்டாமல் தோற்றுப்போகும். ஆகையினாலே ஒவ்வொருவருக்கும் இயற்கையாயுள்ள சக்தியிலும் இடத்தாற் பெறும் சக்தியே மேலானது.

நன்மக்களால் அடையும்பயன்.

5. ஒண்குணத்தின் நல்லான் ஒருவன் உளனாயின்
வண்குலத்துக் கெல்லாம் வனப்புண்டாம்—தண்பொழிலில்
சந்தனமென் வாசத் தருவொன்றினால் மிளிரும்
அந்தவனம் எல்லாம் அறி.

(இ-ள்.) நற்குண நற்செய்கையுள்ள ஒரு புத்திரன் உண்டானால் அவனால் அவன் குல முழுதும் பெருமையை யடையும். எப்படி யென்னில், ஒரு சோலையில் ஒரு சந்தன விருக்ஷமுண்டாமானால் அதனால் அச்சோலை முழுதும் பரிமளிக்குமாறுபோல.

துஷ்டமக்களால் வரும்கேடுதி.

6. காட்டகத்தே ஒருலவை தீப்பற்றிற் காடெல்லாம்
வீட்டுமது போல விளங்கிழையாய்—கேட்டைத்
தருவான் ஒருசழக்கன் தன் குலத்துக்கெல்லாம்
வெருவந்த செய்து மிக.

(இ-ள்.) காட்டில் புதரொன்றில் தீப்பிடித்துக் கொண்டால் அதனால் அக்காடுமுழுதும் வெந்து பஸ்மமாதல் போலக் கெட்ட குணமுள்ள ஒருவன் குலத்திலுண்டானால் அவனால் அவன் குலம் முழுதும் நாசமடையும்.

அற்பரும் மேலோரும் இத்தன்மையரெனல்.

7. பூரியர்தாம் என்றும் புகல்வார் இடம்பங்கள்
சீரியரோ யாதொன்றும் செப்பாரே—பேருலகில்
வெண்கலம்போல் ஓசை மிகாதுகாண் செம்பொன் செய்
ஒண்கலத்துக் கென்றே உணர்.

(இ-ள்.) உலகத்தில் அற்பகுணமுடைய கீழ்மக்கள் தம்மைப் புகழ்ந்து டம்பமான அநேக வார்த்தைகளைச் சொல்லிக்கொள்வார்கள். பெருமைக் குணங்களுடைய மேன்மக்கள் அடக்கமாயிருப்பார்கள். எவ்வாறெனில், வெண்கலபாத்திரங்கள் கலகலவென்று சத்திக்கும். பொற்பாத்திரங்களோ சத்திக்க மாட்டா.

செல்வமும்வறுமையும் பழவினைக்கீடாக உண்டாகும்.

8. முற்பிறப்பில் நல்ல முயலாதார் செல்வத்துக்
கிப்பிறப்பில் ஆசைப்பா டெய்திடுதல்—பொற்புடனே

விச்சிட்டு வேளாண்மை செய்யான் விளைவுக்கு
நச்சிட்ட வாறெனவே நாடு.

(இ-ள்.) பூர்வஜன்மத்தில் நல்ல புண்ணியங்களைச் செய்யாமல் இப்பிறப்பில் பாக்கியத்துக்காசைப் படுதல் சார்காலத்தில் உழுது விதைவிதைத்துப் பயிர்செய்யாதவன் பின்பு பலன்கொள்ளும் காலத்தில் பலத்துக்கு ஆசைப்படுதல் போலாம் என்றறிதல் வேண்டும். 'முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்' என்ரூர் ஏனையோரும்.

மனக்கிலேசத்தை மாற்றத் தரமில்லை.

9. இரும்பொடிந்தால் எத்தனைகா லேனுமதைக் கொல்லன்
திரும்பவுமே மூட்டத் தெரிவான்—விரும்பும்
மனமொடிந்தால் யாரே மருவியதை முன்போல்
இனமொருகால் மூட்டவலார் ஈங்கு.

(இ-ள்.) இரும்பினுற் செய்த கருவியொன்று ஒடிந்துபோனல் கருமான் அதை உலையிற்காய்ச்சித் தட்டிக்கொட்டி மூட்டவைப்பான். மனத்துக்கு வியாகுலம் உண்டானல் அவ்வியாகுலத்தைத்தீர்த்து மனத்தை முன்னிலைமைக்குக் கொண்டுவருதல் யாரால் ஆகும். ஆதலால் பிறருக்கு வியாகுலமுண்டாகும் படியான காரியங்களை நாம் செய்யலாகாது.

ஞானியென்பவன் இத்தன்மையானவன் எனல்.

10. பிறர்தாரம் வேண்டான் பிறர்பொருளும் வெஃகான்
பிறர்க்குதவி செய்வான் பெரிதும் —பிறர்தன்னைக்
காயினுந்தான் காயானுய்க் காசினியோர் போற்றநனி
மேயவனே ஞானியென வேண்டு.

(இ-ள்.) எவன் பிறர்மனை நயவாமல், பிறர் பொருளுக்கும் ஆசைப்படாமல், தன்னுலியன்ற அளவு பிறருக்கு உதவி செய்வானுய் பிறர் தன்னை வெகுவாக உபத்திரவிப்பினும் தான் பொறுத்திருந்து அவர்க்குத் திரும்பவும் உபத்திரவம் செய்யாமல் யாரும் கொண்டாட இருந்து வருகிறுனே அவனே மகா ஞானியென்று சொல்லப்படுவான்.

ஆசையே நாசத்துக்குக்காரணம்.

11. தூண்டிலிரைக் காசித்துத் துள்ளுமீன் ஆருயிர்போய்
மாண்டிடல்போல் மாநிலத்தில் மாந்தர்தாம்—வேண்டரிய
ஆசைப்பேய் பற்றி அலைப்ப அறிவழிந்து
நாசப்பா டெய்துவர்நீ நம்பு.

(இ-ள்.) தூண்டிலில் வைத்த இரைக்கு ஆசைப்பட்டு மீன்கள் தம்மாவியை இழத்தல் போல உலகத்தில் மனிதர்கள் ஆசையானது பேய்போலப் பிடித்தலைத்தலினுலே தமது நல்லறிவு கெட்டு அவ்வாசைக்குள்ளாகித் தீவினைகளைச் செய்து நாசமடைகின்றூர்கள்.

உதாரியைக்காணில் உலோபிவருந்துவான்.

12. ஈவான் மருங்கின்வாழ் ஈயாதான் அக்கொடைகண்
டாவா உயிர்விடுமால் அன்றேகாண்—பூவாய் வான்

கற்பகத்தின் பாங்குவளர் கள்ளிச் செடிதானும்
பொற்புறுவ துண்டோ புகல்.

(இ-ள்) உதாரியின் பக்கத்தில் உள்ள உலோபி அவ்வுதாரியின் கொடையைக்காணுந்தோறும் கவலையுற்றுப் பிராணனையிழப்பான்—எப்படியெனில் கற்பக விருக்ஷத்திற்கு அடியில் முளைத்த கள்ளிச்செடி செழித்து வளரமாட்டாததுபோல.

அற்பர் பெரியோருடைய அருமையை அறியமாட்டார்.

13 அற்பருக்கு மேலாம் அதிகாரம் ஒன்றளித்தால்
பொற்புடையாரைத் துரத்திப் போக்கிடுவார்—குப்பைச்
செருப்பைக் கடித்துவக்கும் சீரில்லா நாய்தான்
கருப்பிரசம் காணுமோ தான்.

(இ-ள்.) அற்ப ஜனங்களுக்கு மேன்மையான அதிகாரத்தைக் கொடுத்தால் அவர்கள் மேன்மக்களது பெருமையை அறியாமல் வெறுத்து ஹிம்ஸை செய்து துரத்திவிடுவார்கள். செருப்புத்தோலைக் கடித்துச் சந்தோஷிக்கும் நாய்க்குக் கருப்பஞ்சாற்றின் மாதுரியத்தைத் தெரிந்து கொள்ளக்கூடுமோ.

பணமுள்ளவரையே வெகுமானிப்பார்கள்.

14. கைப்பொருளொன் றுள்ளானைக் காமவேளென்றுரைப்பார்
அப்பொருள்தான் இல்லா தருந்துயரம்—தப்பானைக்
கன்னற் சிலைவேளே யானாலும் கைத்திடுவார்
இன்னற் புலையோனில் ஈங்கு.

(இ-ள்.) செல்வமுடையவன் இழிகுலத்துதித்த குரூபியானாலும் உயர்குலத்திற் பிறந்த மன்மத லக்ஷணமுள்ளவனென்று புகழ்வார்கள். செல்வமில்லாமல் வறுமைத்துன்ப மடைந்தவனை உயர்குலத்தானாயினும் அழகிற் சிறந்த மன்மதனானாலும் புலையனை வெறுத்தல்போல வெறுப்பார்கள்.

பதிசொல்லைக்கேளாதவள் பதிவிரதையாகாள்.

15. பதிசொற் கடந்தொழுகும் பாவையாள் அன்னான்
சதியன் றவன்தலையிற் றீட்டும்—விதியாம்
இடம்பயின் று வாழ்தலினும் எண்மடங்கு நன்று
கடும்புலிவாழ் காடென்று காண்.

(இ-ள்.) தன் கொழுநன் சொற்படி நடவாத ஸ்த்ரீ அவனுக்கு ஸதி யென்னும் நன்மனையாள் ஆகாள். பின்னென் னென்னில் அவன் தலையில் அனுபவிக்கும்படி எழுதி நியமித்த த்வினைப்பயனே யாவாள். அவளோடு கூடிவாழ்தலினும் கொடியபுலிகள் சஞ்சரிக்கின்ற காட்டிற் சென்று வாழ்தல் எண்மடங்கு நன்றாகும்.

வெளி வேஷத்தைக்கண்டு உலகத்தார் மதிப்பார்கள்.

16. காதிற் கடுக்கன் கழுத்தில் வடந்தோளின்
மீதுத் தரியம்கை வெற்றிலையும்—ஓதக்கேள்
தக்கபரு மேனியுமுண் டாமேற்சன் மானிப்பர்
எக்குலமே யாய்விடினும் என்.

(இ-ள்) காதில் கடுக்கனும் கழுத்தில் மணிமாலையும் தோள்மேல் உத்தரீயமும், கையில் வெற்றிலையும் உடையோனாய் இவற்றிற்குத் தக்கபடி பகட்டான பெருத்த மேனியும் ஒருவனுக்கிருக்குமானால் அவனை எவ்வளவு இழிகுலத்தோனாயினும் உலகத்தார் சன்மானிப்பார்கள்.

## CHARACTER SKETCH: THE STORY OF PROSCOVIA.

## குணவலி விளக்கம்: ப்ராஸ்கோவியாவின் சரித்திரம்.



உலகத்தில் ஸ்திரீ புருஷர்களில் அநேகர் அநேக பெருந்தன்மையான காரியங்களைச் செய்து பேரும் பிரசித்தியும் பெற்றிருக்கிறார்கள். சிலர் ராஜபக்தியினாலும், சிலர் மாதா பிதாக்களிடத்தில் வைத்த வாஞ்சையினாலும், சிலர் புத்திரர் புத்திரிகளிடத்தில் வைத்த வாத்ஸல்யத்தாலும், சிலர் சகோதர விஸ்வாசத்தாலும், சிலர் புருஷபார்யா ப்ரணயத்தாலும், சிலர் ஸ்நேக பந்தத்தாலும் அதி சிலாக்கிய தரமான அருஞ்செயல்களைச் செய்திருக்கின்றார்கள். மேற்கூறிய பலவகையான அன்பினுள் எதனாலேனும் ஒன்றால் தாண்டப்பட்டுத் தமக்கு நேரிடும் கஷ்டங்களையும் சிரமங்களையும் பொருள் பண்ணாமல்—

"மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயினர்."

என்றபடித் தாம் மேற்கொண்ட நற்கருமங்களை உறுதியாயிருந்து செய்து முடித்த புண்ணிய புருஷர்களின் விருத்தாந்தங்களைப் படிப்பதனாலே நமக்கு விசேஷ நன்மை யுண்டென்பது யாவர்க்கும் சம்மத மாதலினாலே, அவர்களில் ஒருவளாகிய ப்ராஸ் கோவியா என்னும் மாது சிரோமணியின் சரித்திரத்தை யாம் அறிந்த அளவில் இங்கு எழுதுகின்றோம்.

ப்ராஸ்கோவியா என்னும் பெயர்கொண்ட இந்நங்கை, நெடுநாளைக்குமுன் (Russia) ருஷியாதேசத்தில் ருஷ்ய ராஜாங்கத்தில் சேனைத் தலைவராயிருந்த லாபூலாவ் என்னும் ஒரு கனவானின் ஏகபுத்திரி. இவளது தந்தை யாதோ காரணத்தால் நியாய நியாய விசாரமில்லாமல் மனம்போனபடிப் பிரவர்த்திக்கும் கொடுங்கோன் மன்னனாகிய ஒரு சக்கரவர்த்தியினால் கடுமையாகத் தண்டிக்கப்பட்டுத், தமது ஜன்ம பூமியினின்றும் அநேக நூறு காதங்களுக்கு அப்பாலுள்ள சிபேரியா தேசத்துக்கு அனுப்பப்பட்டு, ஆயுள் முழுதும் அங்கு தானே இருந்துவரும்படி சிக்ஷை விதிக்கப்பட்டார். இது ஏதோ சுலபமான தண்டனையென்று நினைக்கக்கூடாது. ஒருவனுக்கு எல்லாப் பேறுகளிலும் சுதந்திரம் என்பது மேலாகியது. அச்சுதந்திரத்தைஇழத்தல் உயிரிழத்தலினும் கடுமையானது, ஆனதினாலே இவருக்கு இஷ்டமானபடி ஓரிடத்துக்குப் போகவும் வரவும் இல்லாமல்நியமித்த இடத்திலே இருக்கவேண்டி வந்த நிர்ப்பந்தம் மிகவும் பொறுத்தற் கரியதே. மேலும் ஒவ்வொருவருக்கும் அவரவர் பிறந்து வளர்ந்து சுகித்திருக்கும் ஊரையும் உறவினரையும் நண்பையும் இனத்தையும் விட்டுச் சிறிதுகாலம் பிரிந்திருப்ப தென்றாலும்எவ்வளவோ வருத்தமாயிருக்கும். அப்படியிருக்க, இனி யென்றும் திரும்பி வாராதபடி நெடுந்தூரத்துக் கப்பால் ஆயுளுள்ள வரையில் இருக்க வேண்டிவரின் அதனிலும் கொடியதுயாதுள்ளது? அன்றியும் அவருக்கு நியமிக்கப்பட்ட இடம் சிபேரியாவின் தலைநகராகிய தோபல்ஸ்க் பட்டணத்துக்கு வடக்கில் இஸ்கீம் என்னும் ஒரு குலக்கிராமமாயிருந்தது. அங்கு நாகரிகமேது? நடையேது? பார்வையேது? கேள்வியேது? வேட்டையாடிச் சீவனம் பண்ணும் மறவரும், குறவருமன்றி வேறு சகவாசத்துக் கிடமில்லை. அன்றியும் அங்கு வருஷத்தில் பத்து மாதம் விட விட வென்று நடுக்கி யொடுக்கும் பனிக்காலமாம். அப்பனிக்காலத்தில் இரண்டு மாதமளவில் சூரியரஸ்மியே காணப்படாது. பிரளயாந்த காரம்போல் இருள் மூடிக் கொண்டு ஒரே இரவாயிருக்கும். வருஷம் முழுதும் வெயில் எறித்துக்கொண்டிருக்கும் உஷ்ண தேசத்தில் இருப்பவர்களாகிய நமக்கு அச்சீத தேசத்தின் பனியின் கொடுமை இவ்

வளவென்று ஊகிக்கவும் முடியாது. இவ்வளவும் போதாதென்று அவருக்குப் பாவம்!

"நெருப்பினுட்டுஞ்சலுமாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பாடரிது."—குறள்.

"நல்குரவென்னுமிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று விடும்"—குறள்.

என்றபடி அநேக துன்பங்களுக்குக் காரணமாகிய வறுமைத் துயராலும் வருந்த வேண்டியிருந்தது. அவருக்குத் துரைத்தனத்தாரால் காலக்ஷேபார்த்தமாகக் கொடுக்கப்பட்ட ஜீவிதப்பொருள் நாளொன்றுக்கு இரண்டணுவுக்குமேல் இல்லை. இது தவிர வேறோர் அஸ்பதமும் இல்லை. ஆதலால் இவரது நிலைமை மிகவும் பரிதபிக்கத் தக்கதாயிருந்தது.

இவருக்குக் கால வித்தியாசத்தால் இந்தத் தூர்க்கதி நேர்ந்தபோது கணவனைப் பிரிந்திருத்தல் கற்புடைய மகளிருக்கு அழகன்றாதலின், இவரது சுகதுக்கங்களுக் குரியராகிய இவர் மனைவியும் மூன்று வயதுக் குழந்தையாகிய ப்ராஸ்கோவியாவும் உடன் சென்று இவருக்கு நேர்ந்த துயரத்தைத் தாமும் பகிர்ந்து கொள்ளலாயினர். நெடுநாள் மேற்பதவியிலிருந்து சுகங்களை அனுபவித்து வந்த இவரது மனையாளுக்கு இங்கு பணிவிடை செய்ய ஒருவரும் இல்லாமையினாலே மெழுகல், பெருக்கல், சமைத்தல், தோய்த்தல் முதலான நித்திய விருத்தி வீட்டுக் காரியங்களெல்லாம் தாமே மெய்வருந்தச் செய்துகொள்ள வேண்டியதாயிற்று. ஆயினும், அவர் அவற்றைச் சலிப்படையாமல் செய்து 'குலமகட் கழகுதன் கொழுநனைப் பேணுதல்' என்றபடித் தம் கணவருக்குத் தக்க ஆறுதலைச்சொல்லி அவர் வருத்தமடையாமல் பாதுகாத்து வந்தார். ப்ராஸ்கோவியாவுக்கு வயது செல்லச் செல்லத் தாயாருக்கு உதவியாக வீட்டுக் காரியங்களைத் தானும் செய்து வந்ததேயன்றி வெளியிற் சென்று கூலிவேலை செய்து யாதேனும் கிடைத்த பொருளையும் கொண்டுவந்து கொடுப்பாள். ப்ராஸ்கோவியாவுக்குப் பதினாறு வயதாகும் வரையிலும் தன் தந்தையின் வருத்தமாவது, தங்கள் முன்னிலைமையாவது, அவளுக்குத் தெரியாததினாலே களித்த சிந்தையும் சிரித்த முகமுமாய்ச் சந்தோஷமாயிருந்து வந்தாள். பின்பு தந்தை விடுதலை யடைவதற்குத் தாம் செய்த பிரயத்தனங்களெல்லாம் பயனில்லாமற் போனதனால் தம் வருத்தத்தைப் பொறுக்கமாட்டாதவராய் அதுவரையில் அவளுக்குத் தெரியவராமல் மறைத்து வைத்ததுபோல மறைத்தலை விட்டுப் பகிரங்கமாகத் தமக்கு நேர்ந்த கதியையும் அதற்கு விமோசனம் இல்லாமையையும் சொல்லித் துக்கிக்கத் தலைப்பட்டதனால் ப்ராஸ்கோவியாவின் களிப்பும் சிரிப்பும் சந்தோஷமும் இரவு கண்ட வெய்யில்போல மறைந்து போயின.

அது முதலாகப் ப்ராஸ்கோவியா தன் தந்தையின் வருத்தத்தைத் தீர்த்தருளும்படிப் பரமபிதாவாகிய கடவுளை அநுதினமும் காலையிலும், மாலையிலும் உள்ளன்போடு நெடுநேரம் தியானித்துப் பிரார்த்தித்து வந்தாள். அப்படி வருநாளில் ஒருநாள் 'தானே ருஷியாவின் தலைநகராகிய பீடர்புரிக்குச் சென்று சக்கரவர்த்தியை நேரிடக் கண்டு தன் தந்தையின் தண்டனையை மாற்றி மன்னிக்கும்படி விண்ணப்பம் செய்து கொண்டாலோ' என்னும் எண்ணம் காரிருளில் தோன்றிய மின்னொளிபோல் அவளுள்ளத்தில் பளிச்சென்று உதித்தது. அது முதலாக அவள் தன் வீட்டுக் கருகில் உள்ள ஓர் தோப்பிற் சென்று, தனியேயிருந்து நெடுநேரம் அதைப்பற்றிப் பலமுறையும் ஆலோசித்து, தனக்குள்ளே திடம் செய்துகொண்டு, அக்காரியத்தைச் செய்து முடிக்கத் தனக்குப் போதுமான சக்தியும் துணையும் அருளல் வேண்டுமென்று அன்பரது வேண்டுகோளுக்கிரங்கும் கருணாநிதியாகிய கடவுளை முழுவலன்போடு இதயநெக்குருகிப் பிரார்த்தித்து வந்தாள்.

ப்ராஸ்கோவியாவின் சரித்திரத்தைப் படிப்பவருக்கு, அவளது பக்திவலியும், கடவுளிடத்தில் அவள் வைத்திருந்த அசையாத நம்பிக்கையும், எளிது புலப்படாமற் போகாது. "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்னும் வாக்கியத்தை பிரமாணமாகக் கொண்டு அக்கடவுளின் துணையேயன்றித் தனக்கு வேறு துணையில்லை யென்றும், கடவுளின் திருவருளால் சாதிக்க முடியாத தொன்றும் இல்லையென்றும், நிச்சயமாக நம்பியிருந்தாள். இந்நம்பிக்கை யுடையார்க்கு ஆகாத காரியமுமில்லை; தீராத துயருமில்லை; வாராத நன்மையுமில்லை; சாராத செல்வமும் இல்லை; நேராத இன்பமும் இல்லை. இப்பக்தியும் நம்பிக்கையும் இல்லாமையினாலன்றோ சுழல் காற்றிலகப்பட்ட சருகுபோலவும் கடற்புயலிலகப்பட்ட கலம்போலவும் மனம் நிலையின்றிக் கலங்குவது! அன்னே யுன்னை யல்லாலினி யாரை நினைக்கேனே' 'அடிகேளென்னமுதே யெனக்கார் துணை நீயலதே' என்று மெய்யன்போடும் பரமனைச் சரணமாக அடைபவர்களுக்கு யாதொரு குறையுமில்லை. இது நிச்சயம்.

ப்ராஸ்கோவியாவுக்குத் தான் கருதிய விஷயம் சற்றும் நிறைவேறுதற் கிடமில்லாத பித்துறவு போலத் தோன்றினமையால், தந்தை தாயாரோடு அதைச் சொல்லவும் சங்கோசப்பட்டுப் பலமுறையும் அதைப் பிரஸ்தாபிக்க வாயெடுத்தும் உரையெழாமல் மௌனமாயிருந்து வந்தாள். பின்பு ஒரு நாள் என்ன வந்தாலும் சொல்லியே விடுகிறதென்று நிச்சயித்துக்கொண்டு தந்தை சந்தோஷமாயிருக்கும் சமயங்கண்டு நெஞ்சும் மார்பும் திடுதிடென்று அடித்துக்கொள்ளத் தான் கருதிய விஷயத்தை ஒருவாறு சொல்லித் தெரிவித்தாள். அது கேட்டுத் தந்தை கைகொட்டிச் சிறித்து தம்மனைவியை நோக்கிப் பார்த்தாயா' நமக்கு "இனி குறைவு மில்லை! நம்மை இத்துயரினின்றும் நீக்குகைக்கு நம்மகள் ஏற்பட்டுவிட்டாள்! நாளைக்கே நமக்குப் பிரயாணம் தான்! மூட்டை கட்டிவைக்க வேண்டியது தான்" என்று பரிகாசமாய்ச் சொல்லி அவள் கூறிய விஷயங்களையும் மனைவிக்குச் சொன்னார். அது கேட்டதும் தாயார் சிறிது கடுந்தொனியோடு, 'உனக்கு வேறே வேலையில்லையா? செய்கிற வேலையை விட்டுச் சிரிப்பாணி வேலையைச் செய்தாளாம்' என்று நல்ல யோசனை பண்ணினாய்! பீடர்புரிக்குப் போவது அப்புறம் ஆகட்டும்: இப்போது சாப்பாட்டுக்கு எத்தனம் பண்ணு" என்றாள்.

ப்ராஸ்கோவியாவுக்குத் தந்தையின் ஏளனத்தாலும் தாயாரின் கடுஞ்சொல்லாலும் உண்டான துக்கமும் வெட்கமும் பொறுக்க முடியாமல், பாவம், விம்மி விம்மி அழத் தொடங்கினாள். அது கண்டு தாயார் இனிய வசனங்களைச் சொல்லி அம்மா அழாதே: நின் தந்தையின் இடுக்கண்ணை எவ்விதமாயினும் தவிர்க்க வேண்டுமென்று நீ எண்ணியது நியாயமே! அது விஷயமாக இன்னமும் ஆரத்தீர ஆலோசித்து நிச்சயிப்போம்: வருத்தப்படாதே என்று சாந்தமாகத் தேற்றினாள்.

அது முதலாக மூன்று வருடகாலம் அவள் தன்னைப் பீடர்புரிக்கு அனுப்பும்படி எவ்வளவோ மன்றாடிக் கேட்டும் அவர் உடன்படவில்லை. அவ்வாறு உடன் படாதது ஆச்சரியமன்று. பதினாறு வயது இளம்பிராயமுள்ள பேதைப் பெண்பிள்ளையை ஐந்நூறு காதத்துக் கப்பாலுள்ள பீடர்புரிக்குக் கால்நடையாக நடந்து அநேகம் ஆறுகள், மலைகள், வனங்கள் முதலியவற்றைக் கடந்து சென்று, அங்கு ஒருவருடைய வாக்குசகாயமு மில்லாமல், சக்கிரவர்த்தியின் தரிசனம் பெற்றுத் தான் எண்ணிய வினையை முடிக்க வல்லவளாக எண்ணியனுப்ப எவர்தான் உடன்படுவார்

கள். தம் உயிரினும் சிறந்த தன்மகளை அவ்வளவு அபாயங்களுக்கும் இடர்களுக்கும் துயர்களுக்கும் உட்படுத்தித் தம் விடுதலையைப் பெறுவது ஒருவேளை சாத்தியமாயினும் அது பெற்ற தந்தைக்குச் சம்மாதமாகுமா? தர்மமாகுமா? பிள்ளையின் அருமை பெற்றவர்க்கன்றோ தெரியும்? ஆதலின், அவர் ப்ராஸ்கோவியா எவ்வளவு சொல்லியும் ஒப்பாமல் முடிவில் அதைப்பற்றிப் பிரஸ்தாபிக்கவே கூடாதென்று கண்டித்தனர். ப்ராஸ்கோவியா என்ன செய்வாள்! தந்தை தாயாரின் சம்மதமில்லாமல் ஒரு காரியத்தைச் செய்தல் சற்குண சம்பத்தியுள்ள பிள்ளைகளுக்கு அழகாகுமோ? 'தந்தை தாய்ப்பேண்' என்றும் தந்தை சொன் மிக்க மந்திரமில்லை. யென்றும் 'தாய் சொற்றுறந்தால் வாசகமில்லை' யென்றும் வேதவாக்கியங்களும் சொல்லுகின்றனவே. ப்ராஸ்கோவியா பெற்றோர்களின் அநுமதியும் அநுக்கிரகமும் பெற்றுத் தான் மேற்கொண்ட காரியத்தைத் தொடங்கினலன்றோ கடவுளுடைய அருளும் சித்திக்கும்? அவரது அநுமதியில்லாமல் அவர் சொல்லைக்கடந்து செய்யும் செய்கை நற்செய்கையாயினுமது தீதாய் முடியுமன்றோ? ஆகலால் உத்தம லக்ஷணமுடைய உயர் குலமகளாகிய ப்ராஸ்கோவியா தந்தையின் அநுமதியின்றி ஒரு காரியம் செய்ய வல்லளல்லள். ஆயினும் தான் கொண்ட எண்ணத்தை விட்டுவிடாமல், அக்காரியத்துக்குத் தந்தை தன் அநுமதி கொடுக்கவும் அதனைச் செய்து முடிக்கத் தனக்குச் சக்தியும் தைரியமும் அருள்வும் எப்போதும் கடவுளைப் பிரார்த்தித்துக்கொண்டே யிருந்தாள்.

(இன்னும்வரும்.)

## A LESSON IN NATURE STUDY: RAINBOW.
### பிரகிருதி வித்யாம்சம்: வானவில்.

வானவில்லை யறியாதார் இவ்வுலகத்தில் ஒருவருமிலர். இதனையே இந்திரதனுசு என்றும் சொல்லுவார்கள். சூரியனுக்கு எதிரில் மழை பெய்யுங் காலத்தில் சூரியரஸ்மிகள் ஜலத்துளிகளின்மீதுவிழ அதிக அற்புதமானதும் மனதுக்கு ரம்மியமானதும் சப்த வர்ணங்களுடன் கூடினவில்போன்ற ஓர் உருவம் ஆகாசத்தில் அடிவானத்துக்குச் சமீபத்தில் தோன்றும். உற்றுநோக்குங்கால் ஒன்றன்மேலொன்றாக இரண்டுவானவில் தோன்றும். உள்வானவில்லின் வர்ணரேகைகளின் அமைப்பானது தெளிவாயும் பிரகாசமாயுமிருக்கும். அதற்குமேல் சொற்பம் இடைவிட்டுத் தோன்றும் மற்றொன்றின் வர்ணரேகையின் அமைப்பானது வர்ணங்களின் நிலைமை முறைமாறி அவ்வளவு பிரகாசமின்றி மங்கின நிறமுள்ளதாய்த் தோன்றும். சூரியன் அடிவானத்திலிருந்து நாற்பத்தைந்து டிக்கிரிக்குமேல் உயர்ந்திருந்தால் வானவில் கண்ணுக்குத் தோன்றாது. அதாவது கண்ணுக்குத் தோன்றும் ஆகாசவளைவை நான்கு பாகமாகச் செய்யுங்கால் அடிவானத்திலிருந்து மேற்கிலும் கிழக்கிலும் கால் பாகம் இருக்குமிடத்திற்குள் சூரியன் இருந்தால் இந்திர தனுசுவின் தோற்றம் நம் கண்களுக்குத் தோற்றும். இதற்குக் காரணமென்ன? சூரியனிடமிருந்து பார்க்கிற மனிதனுடைய கண்ணுக்கு நேர்கோடு இழுத்து அந்தக் கண்ணினிடமிருந்து சூரியனுக்கு எதிர்ப்புறமாக 45-டிக்கிரியுள்ள ஒருகோணத்தை ஏற்படுத்தினால் அந்தக் கோணத்தின் மேற்கோட்டின் எல்லைக்குள் பிரகாசமான வானவில்லானது தோன்றும். ஆகவே எல்லா மனிதர்களும் ஒரே உயரமுள்ளவர்களாகவும் ஒரே இடத்திலிருந்து பார்க்கக்கூடாதவர்களாயுமிருப்பதால் உண்மையில் 45-டிக்கிரியுள்ள கோணங்கள் பல உண்டாகின்றன. அதனால் யதார்த்தத்தில் பார்க்கிற பேர்கள் எத்துணைபேர்

களோ அத்தனை வானவில் ஆகாசத்தில் ஏற்படும். அவனவன் பார்ப்பது ஒரு வானவில்லாயினும் அவனுடைய உயரத்துக்குத் தக்கபடி அவன் ஒன்றைப் பார்க்கிறான். மற்றொருவன் தானிருக்கிற இடத்திலிருந்து பார்க்கையில் மற்றொன்றைப் பார்க்கிறான். ஆகவே எல்லோரும் உண்மையில் ஒரே வானவில்லைப் பார்க்கவில்லை. ஆனால் பலபேர்கள் வானவில்லைப் பார்க்குங்காலத்தில் ஏறக்குறைய ஒரே யிடத்தில் ஒரே வானவில்லைப் பார்ப்பதுபோலவே நினைக்கிறார்கள். எல்லோரும் ஒரே குறிப்பிட்ட இடத்தை நோக்கி இதோ வானவில் தோற்றுகிறதென்று சுட்டிக்காட்டுகிறார்கள். இதற்குக் காரணம் என்னெனில் சூரியன் மிக்க தூரத்திலிருக்கிறபடியாலும் (9,20,00,000 மைல் தூரம்) பற்பல மனிதர்களுடைய உயரத்தின் அளவு மிகச்சொற்பமாயிருப்பதாலும் அல்லது அடிக் கணக்குகளாயிருப்பதாலும் மேற்கூறிய வித்தியாசங்களிருந்தும் தோற்றத்தில் இல்லாமல் பொய்த்துப்போகின்றன. இன்னும் ஆராயின் சூரியனுடைய ரஸ்மிகள் ஒன்றன்பின் ஒன்றாய் வருகின்ற ஜலத்துளிகளின் பிரவாகத்தின்மேல் பட்ட ஒவ்வொரு ஜலத்துளியும் ரஸ்மிகளைப் பிரித்துச் சித்திரம் எழுதினாற்போல் ஆகாசத்தில் தோற்றத்தை யுண்டுபண்ணுகின்றது. ஒரு விநாடியில் பார்த்த ஜலத்துளிகள் கீழே விழுந்து ஜலத்துளி பிரவாகங்கள் வந்து கொண்டே இருக்க வான வில்லில் யாதொரு கீற்று அல்லது பிளப்பு இல்லாமல் சித்திரப் படம்போல் கோணாமற் குறுகாமல் இடைவிடாமல் வானவில்லின் தோற்றத்தைப் பார்க்கிறோம். இதற்குக் காரணமென்ன வெனில், பார்க்கிற நம் கண்ணில் உண்டாகும் பிம்பம் ஒவ்வொன்றும் அரைக்கால் விநாடி கால அளவு தங்கிப்பின் மறைகிறது. ஒரு பிம்பம் கண்ணில் பதிந்து அது மறைகிற காலத்துக்குள் அதேமாதிரியான மற்றொரு பிம்பம் ஒன்றன்பின் ஒன்றாய்த்தொடரும் பக்ஷத்தில் ஒரே பிம்பத்தைப் பார்க்கிறதுபோலவே நமக்குத் தோன்றும்.

இதைச் சிறு உதாரணங்களால் நன்றாய்த் தெரிந்து கொள்ளலாம். புஸ்தகம் வாசிக்கும் பொழுது கண் கொட்டினபோதிலும் எழுத்துக்கள் ஒரே வரிசையாய்த் தோற்றுகின்றன. கொள்ளிக் கட்டையைச் சுற்றுங்கால் ஒரே கொள்ளிவட்டம் தோன்றுவது யாவரும் அறிந்ததே. வாயில் ஜலம் விட்டு சூரியனுக்கு எதிரே துப்பும் பக்ஷத்தில் வானவில்கள்போன்ற உருவங்கள் தோன்றுவது பிரத்தியக்ஷம். நாம் வஸ்திரம் சுத்திபண்ணுங்காலத்தில் கல்லில் ஓங்கி அடிக்கையில் ஜலத்துளிகள் சிதறுங்காலத்தில் வானவில்லுகள் தோன்றுவதும் சகசம். சினிமிடோகிராப் காட்சியில் (அதாவது வஸ்துக்கள் உண்மையில் யியங்குவனபோல் உயிர்ப்பித்துக்காட்டும் படங்களைக் கொண்டுகாட்டும் காட்சி) கண்ணின் ஆதாரமாகக்கொண்டு நடமாடும் வஸ்துக்களின் பல நிலைமைகளின் புகைப்படமெடுத்து அவைகளைச் சக்கிரத்தில் வைத்து விரைவாக அதனைச் சுற்றி, ஒரு துவாரத்தின் வழி பார்த்தால் பின்னம் பின்னமாய்ப் புகைப்படங்கள் ஏற்பட்டிருக்கின்ற ஒரு வஸ்துவின் பல அவயவங்கள் கண்ணின் சக்தியால் ஒன்று சேர்க்கப்பட்டுப் பலவிதமாக இயங்கும் வண்ணம் நாம் பார்க்கிறோம். இன்னும் அநேக வித்தைகளில் கண்ணின் சக்தியைப் பிரயோகித்து விசித்திரமான வேடிக்கைகள் செய்கிறார்கள். இந்த வானவில்லின் தோற்றத்தைக் காசிமாநகரில் வேணுகாவனத்தில் பகவான் கௌதமபுத்தர் சில சிஷர்களுடன் சம்பாஷணை பண்ணுங்கால் "சம்சாரமென்று ஒரு பிரவாகம் இந்த வானவில் தோற்றத்தைப்போல" என்று திருவாய் மலர்ந்தருளினர். ஜலத்துளிகளின் பிரவாகம் ஓடிக்கொண்டிருக்க வானவில்லினது நிலைமை சத்தியம்போல் எப்படித் தோன்றுகிறதோ அப்படியே பிரபஞ்சம் என்ற பிரவாகமானது தோன்றியும் மறைந்துத் தோன்றியும் மறைந்தும் ஓடிக்கொண்டிருக்க நிலைத்திருக்கிறது போல் நாமும் எண்ணுகிறோம்.

## HISTORICAL COLUMN: THE THIRD BATTLE OF PANIPAT.

## சரித்திரவிலாசம்: பானிப்பட்டில் மூன்றும் முறை யுத்தம்.

பானிப்பட்டென்பது இந்தியாவினின்று ஆப்கானிஸ்தானத்துக்குப் போகும் மார்க்கத்தில் உள்ள ஒரு நகரம். இது ஆதிகாலத்திலிருந்து அநேகயுத்தங்களுக் கிடமாய் யுத்தபூமியாயுள்ளது. பாரதயுத்தம் நடந்த விடமாகிய குருக்ஷேத்தீரமென்பதும் இதுவேயென்பர். அப்பாரதயுத்தத்தில் பாண்டவரும் துரியோதனுதியரும் மகாபயங்கரமாக இடைவிடாமல் 18-நாள் பரியந்தம் போர்புரிந்து அநேக சாகசங்கள் செய்தது பலருக்கும் தெரிந்தவிஷயமே. பிற்பட்டு அவ்விடத்தில் மூன்று முறை மிக்க கடுமையான போர்கள் நடந்திருக்கின்றன. 1526-ம் வருஷத்தில், பிற்காலத்தில் இந்தியாவில் மொகலாயராஜ்யத்தை ஸ்தாபித்த அதி பராக்கிரமசாலியாகிய பேபரென்னும் ஆப்கானிஸ்தான் ராஜாவுக்கும், அக்காலத்தில் டில்லி நகரத்தி லரசாண்டுகொண்டிருந்த இப்ரஹீம் லோடி யென்னும் மகம்மதீய சக்கரவர்த்திக்கும் பெரும்போர் விளைந்து, அப்போரில் இப்ரஹீம் அபஜயமடைந்து பிராணனையுமிழக்க, அவனது அரசும் உரிமையும் அந்தபேபருக்கு ஸ்வாதீனமாயின. அதற்கு முப்பது வருஷத்துக்குப்பின், அவ்விடத்திற்றுனே, மொகலாய ராஜாவாகிய அக்பர் பாதுஷாவுக்கும் ஹீமுவென்னும் இந்துசேனுதிபதி யொருவனுக்கும் பெரும்போர் விளைந்து அக்பர் வெற்றி பெற்றனன். அந்தப்போரில் மாத்திரம்ஆக்பர் தோற்றுப்போயிருப்பானுயின் மகம்மதீய ராஜ்பம் அன்றேதலைசாய்ந்து, இந்துக்களது ஆட்சியும் வலியும் தலையெடுத்திருக்குமாயிருந்தது. ஆயினும் வெற்றியும் தோல்வியும் ஒருவரது யத்தினமன்றே. அனைவர்க்கும் பொதுவாயிருந்து அனைத்தையும் தம்மிச்சைப்படியே நடத்தும் சர்வசக்தராகிய கடவுளின் ஆணைப்படியேயன்றோ நடப்பது. இவ்விரண்டு யுத்தங்களுக்குப்பின், 1761-ம் வருஷத்தில், இதே இடத்தில், மகம்மதீயருக்கும் இந்துக்களுக்கும் பின்னுமோர் முறை பயங்கரமான யுத்தம் நடந்தது. அந்த யுத்தத்தைப்பற்றிச் சிறிது இங்கு விவரிக்க எடுத்துக்கொண்டோம்.

பதினேழாவது நூற்றுண்டில், மஹாராஷ்டிர ராஜ்பத்தை ஸ்தாபித்து அழியாப்புகழைப் பெற்றோணுகிய சிவாஜிமகாராஜா இறந்துபோக அவனுக்குப்பின் அவன் மகனுகிய சாம்பாஜியென்பவன் சிறிதுகாலம் அரசு செலுத்தினன். இச்சாம்பாஜிக்கு வேண்டிய படைவலியும் துணைவலியும் பராக்கிரமமும் சாமர்த்தியமும் இருந்தும் தாளாண்மை யொன்றில்லாமையினுலே "தாளாண்மையில்லாதான் வேளாண்மை பேடிகை வாளாண்மைபோலக் கெடும்" என்றபடி அவ்வளவும் பயனின்றுகி தன் பகைவனுகிய அவுரங்கசீபின் கையிற் பட்டுக் கொடுமையாகச் சித்திரவதை செய்யப்பட்டிறந்தனன். இவன் மகனுகிய 'சாகு' வென்பவன் அக்காலத்தே டில்லி நகருக்குச் சிறையாகப் பிடித்துச் செல்லப்பட்டு, அங்கு அவுரங்கசீபு மரணமடையும்காலும் பத்துப்பதினைந்து வருடகாலம் சிறையில்வைக்கப்பட்டுப் பின்னர் விடுதலைபடைந்து தன் அரசையும் உரிமையையும் பெற்றனன். இவன் மொகலாயர்களுக்கிடையே நெடுநாள் வளர்ந்து வந்தவனுதலினுலே, அம்மொகலாயர் போலவே சிற்றின்பப்பிரியனுகித் தனது ராஜ்யகாரியங்களிலெவ்வளவேனும் கவனமில்லாதவனுய் எல்லாவற்றையும் தன்னைப்போலவே உதவியற்ற குலுஷாவென்னும் ஒரு பிராமண மந்திரியிடம் ஒப்பித்துவிட்டுத், தான் தன்மனம் போனபடி, வேட்டையாடுதலோ மீன் பிடித்தலோ ஏதோ ஒன்றைச்செய்து வீண்பொழுது போக்கி வந்தனன். அதனுல் இராஜ்பத்தில் கோன்முறை செல்லாமல் குடிகளுக்குப் பாரமான

வரிகள் போடப்பட்டு, இடுக்கண் மிகுதியாகி, இன்னம் சின்னாளங்ஙனமே துரைத்தனம் சீர்குலைந்திருக்குமாயின் மஹாராஷ்டிர ராஜ்யம் சிதறுண்டு நசித்துப்போகும் நிலைமையை படைத்தது. நல்லவேளையாய், அக்காலத்தே, அவனுக்கு நன்மந்திரியாக பாலாஜி விசுவநாத் என்றோர் பிராமணமந்திரி கிடைத்ததனாலே, அம்மந்திரியின் புத்திவன்மையினாலும் சாமர்த்தியத்தினாலும் இராஜ்யம் நிலைகுலையாமல் ஒருசீரில் நிறுத்தப்பட்டது.

இப்பாலாஜி விசுவநாத்தென்பவன் சரித்திரத்தில் முதற் பீஷ்வாவாகக் கணிக்கப்படுகிறான். 'பீஷ்வா' வென்னும் பேருக்கு முதன்மந்திரி யென்பது பொருள். இவனுக்குமுன் இப்பட்டத்தோடு இத்தானத்தில் அநேகர் இருப்பினும் அவர்களுக்கு இவ்வளவு பேரும் பிரசித்தியும் அதிகாரமும் கௌரவமும் இல்லாமையினாலே இவனே முதல் பீஷ்வாவாகக் கருதப்படுகிறான். இம்மந்திரி ஸ்தானமும் நாளடைவில் ராஜஸ்தானம்போலவே தந்தைக்குப் பின் மகனுக்குரியதாகி இவ்விசுவநாதனுக்குப் பின் இவன் புத்திரபௌத்திராதி சந்ததியார்கள் பரம்பரையாக இத்தானத்தை அடையலாயினர். ராஜபட்டம் அழிந்து போனபின்னும் கூட இம்மந்திரிப்பட்டம் அழியாது நெடுங்காலம் நின்று வந்தது. 'சாகு' வென்பவன் பேருக்குமாத்திரம் அரசனே தவிர இராஜ்பத்தில் வைத்தல் எடுத்தல் முதலான சகலமான நடவடிக்கைகளும் பீஷ்வாக்களாலேயே செய்யப்பட்டு, சாகு இறந்தபின், அவன்பின் ஆளுகைக்குத்தக்க சுதந்திரமும் வலிமையுமுள்ளவர் ஒருவரும் இல்லாமையினாலே, அந்தப் பெயர் மாத்திரமான அரசும் இல்லாது பீஷ்வாக்களே உண்மையில் அரசர்களானார்கள்.

இவ்வாறு பீஷ்வாக்கள் ராஜாதிகாரம் முழுதும் கவர்ந்து கொண்டதேயன்றி, இவர்கள் நாளில் மகாராஷ்டிர ராஜ்யமும் முன்னிலும் பன்மடங்கு விரிந்து பலப்பட்டது. இவர்கள் தக்ஷிணகண்டத்தில் நிஜாம் ராஜ்யம் தவிர மற்றப்பாகங்கள் முழுவதையும், வடக்கே இந்துஸ்தானத்தில் பெரும்பாகத்தையும் ஆக்ரமித்துக் கொண்டு, நாளாவட்டத்தில், தம்மதிகாரத்தின் கீழ் சிந்தியா, ஹொல்கார், கைக்கொவார், பான்ஸிலே என்னும் நான்கு அதிபர்கள் வெவ்வேறு இராஜ்யங்களை யேற்படுத்திக்கொள்ள இமச்சேது பரியந்தம் இப்பரதகண்டம் முழுதும் தமதுகொடியை நாட்டமுயன்று வந்தனர். இம்முயற்சிக்குப் பெரிய விகாதமாகி இவரது ராஜ்யமே அடிமுறிந்து குலைந்துபோதற் கேதுவாகப் புகுந்ததுதான் யாமிப்போது விவரிக்கலுற்ற பானிப்பட்டு மகாயுத்தம்.

இங்கு மகாராஷ்டிர பீஷ்வாக்களின் ஆளுகையில் இவ்வாறு தம்மை எதிர்ப்பவர் யாருமில்லாமல், நாளும் ஓங்கிவருங்காலத்தில், அப்கானிஸ்தானத்திலே அஹமத்ஷா அப்தாலி யென்றோர் அரசன் தோன்றினான். இவன் அப்தாலி அல்லது துரானி யென்னும் அப்கான் ஜாதியாருக்குத் தலைவன். முதலில், பாரசீகமன்னனாய் இந்தியாவின் மீது படையெடுத்து வந்து டில்லி நகருட்புகுந்து அந்நகரமாக்களை அநியாயமாக ஆயிரக்கணக்காக ஆபாலவிருத்தம் கொடுங்கொலை புரிவித்துச் சங்கரித்துக் கொள்ளை கொண்டுபோனவனாகிய நாதர்ஷா வென்பவன் சேவகத்தில் அமர்ந்திருந்து மகாவீரனென்றுபேர்பெற்று, அக்கொடியோன் இறந்தபின்புதான் காந்தார நாட்டுக் கதிபதியாகி, அத்துடன் திருப்தியடையாமல், உடனேதானே இந்தியாவையும் வென்று கட்டிக்கொள்ளத் துராசைகொண்டு, 1747-ம் வருஷத்தில் முதன் முதல் இத்தேயத்துக்குப் படை

பெடுத்துவந்தனன். ஆயினும், நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்குமென்றபடி அவ்வெண்ணம் பலியாமல், மொகலாய சேனாபதியோடு போரில் தோற்றுப்புறங் கொடுக்கத் தொடங்லாயினன்.

'பின்பு, 'ஊக்கமுடைமை ஆக்கத்துக்கழகு' என்னும் முதுமொழியைக் கடைப்பிடித்தவனுகி, மறுபடியும் மொகலாய சக்ரவர்த்தியும் அவன் சேனாபதியும் மாண்டுபோன சமயங் கண்டு, இன்னொருவிசையும் ஓர் பெரும்படையைத் திரட்டிப் போருக்கெழுந்தனன். அப்போது புதிதாகப்பட்டத்துக்கு வந்திருந்த மொகல்யசக்கிரவர்த்தி அவனோடு எதிர்த்துச் சண்டையிடுதற்கஞ்சி, அவனுக்குவேண்டிய பல செல்வங்களையும், லாஹோர், மூல்டான் என்னும் இரண்டு நாடுகளையும் அவசரப்பட்டுக்கொடுத்து அவனோடு சிநேகம் செய்து கொண்டனன்.

இவ்வாறு அகமத்ஷாவுக்கு ஸ்வாதீனமாகிய லாஹோர் நாட்டை மூன்றுவது பேஷ்வாவாகிய பாலாஜி பாஜிராவென்பவனுக்குத் தம்பியாகிய இரகுநாதராவ் என்பவன் ஐதராபாத் ராஜனுகிய காவியத்தின் என்பவனது ஆலோசனையால் படையெடுத்துக் கைவசப்படுத்திக்கொண்டனன். இதையறிந்ததும், அகமத்ஷா மகா கோபாக்கிராந்தனுகித் தான் அதன்முன் என்றும் சேர்த்தில்லாத கடல்போன்ற பெருஞ் சேனையைத் திரட்டிக்கொண்டு 'மஹாராஷ்டிரப் பூண்டே யில்லாமல் மடித்துவிடுகின்றேன்' என்றோர் வஞ்சினம் பூண்டு கடைசியாக இத்தேயத்தின்மீது படையெடுத்துவந்தனன்.

(இன்னும் வரும்)

## A LESSON IN ECONOMICS: CAPITAL.

### அர்த்த சாஸ்திரம்: மூலதனம்.

தனோத்பத்திக்கு வேண்டிய [illegible] மூன்றுவது மூலதனம். தனோ[illegible] ற்காக யந்திராதிகளாகவாவது, [illegible] ளுக்கு ஆகாரம் வகைராவாகவா[illegible] சனப்படுத்தப்படும் பொருளுக்கு [illegible] தனம் என்று பெயர்.

மூலதனத்தின் உத்பத்தி. மூல[illegible] தியாவது எல்லாரும் கண்கூடாய்[illegible] கூடியவிஷயமே. ஒரு சிறு உதார[illegible] தும். ஒரு கடற்கரையில் மீன்பிடித்து [illegible] செய்துவரும் செம்படவர் கூட்டத்தை[illegible] விசாரித்துப்பார்ப்போம். முதல் முதல் அவர்கள் கரையில்வந்து தங்கும் மீன்களைப்பிடித்து அன்னன்றுடு காலக்ஷேபம் செய்துகொண்டு வருவார்கள். மீன்கள் ஏராளமாய்க்கிடைத்தால் மஸ்தாகத்தின்று கொழுத்துத் திரிவார்கள். அவை குறைந்தால் பசியுடன் வருந்துவார்கள். எக்காலத்திற்கும் சரியாக ஆகாரம் கிடைக்கும்படி செய்துகொள்வதற்கு அவர்களால் ஆகாது. ஆனால் இப்படியுள்ள செம்படவக் கூட்டத்தில் ஒருவன் தன் நிலைமையை நன்றுக்க, மீன்கள் அதிகமாகக் கிடைத்தபோது, தனது வாயைக் கையை பொடுக்கிக் கொஞ்சம் சேர்த்துவைத்தால், இப்படிச் சேர்த்து வைக்கப்பட்டதிற்கு தனம்என்று பெயர்வரும்.

இப்படிச் சேர்க்கப்பட்ட திரவியஸஞ்சயத்தை கஷ்டதசை வந்தகாலத்தில் சாப்பிடுவதற்காக வைத்துக்கொள்ளலாம். அல்லது அவைகளைக்கொண்டு வேறொரு பதார்த்தம் உண்டாக்கத்துவக்கலாம். எப்படியெனில், மீன்கள் குறையுங்காலம் கிட்டவே இவன் தன்னுஸ்தியாகிய கருவாட்டை யெடுத்துக் கொண்டு கடற்கரையைவிட்டு உள்நாட்டுப்புறம்போய் அங்கே ஓங்கி வளர்ந்திருக்கும் மரங்களை கல்லுளிமுதலிய சிறு கருவிகளால் வெட்டி அவைகளைக்கொண்டு ஒரு சிறிய படவைச்செய்து முடிக்கலாம். அது முடிந்த

வுடன் அதைத் தோளில் தூக்கிக்கொண்டு போய் கடற்கரை சேர்ந்து அதினால் கரையில் வந்துவிழும் மீன்களைத்தவிர மற்றும் கடலில் போய் பலவிதமான மீன்களைப்பிடித்து பல வாரங்களிலும் அடையக்கூடாத அவ்வளவு மீன்களை ஒரே நாளிற்பெறலாம். இப்படியாக பொருள் ஸம்பாதிப்பதில் உபயோகமாகும் படகு மூலதனம். அதை உடைய செம்படவன் மூலதனக்காரன் (Capitalist). இப்போது இம்மூலதனக்காரன் மூன்று காரியங்களில் ஒன்றைச்செய்யலாம். தன்படகைக்கொண்டு கடற்குள்போய் ஏராளமாக மீன்கள் கொண்டுவந்து அவற்றின் பெருக்கத்தால் கலியாணம் செய்துகொண்டு, குழந்தை குஞ்சுகளைப்பெற்று செம்படவர்களுக்குத் தலைவனாகவாகலாம். அல்லது, மேவறொருவனுக்கு அதை உபயோகத்திற்குக் கொடுத்துவிட்டு அதற்காக அவன் கொடுக்கும் மீன்களாகிய உபஹாரத்தை வாங்கிச் சாப்பிட்டுக்கொண்டு சுகமாக விருதாவில் காலம் கழிக்கலாம். அல்லது அந்தப் படகை வாடகைக்குக் கொடுப்பதுடன், தான் அறிந்த படகுசெய்யும் வித்தையை கைசோரவிடாது மேன்மேலும் படகுகள் செய்துகொண்டு அவைகளை பலபேர்களுக்கு வாடகைக்குக் கொடுத்து ஏராளமான பொருள்களைப் பெறலாம். இப்படியாகப் பிறந்த மூலதனம் அதிகரிக்க வதிகரிக்க திரவியோத்பத்தியும் பலக்கிறது.

மூலதனத்தின் முக்கிய பிரயோஜனமென்னவென்றால் அது உழைப்பை மிகவும் ஸுலபமாக்குகிறது. முன்னால் நடந்துவந்த வேலையின் ஒரு பகுதியைக்கொண்டேமுன்னடைந்த ஸௌக்கியாதிகள் கிடைத்துவிடுவதினால் மீதியாக்கப்பட்ட உத்யமசக்தி வேறு புதுக்காரியங்களில் பிரவேசித்து நூதனமான ஆசைகளைத் தீர்க்க உபயோகமாகிறது. இதற்கு உதாரணம் முன் சொன்ன செம்படவன் படகை நிர்மாணம் செய்ததும் ஒரு நாளிலேயே மற்றவர்கள் பலநாளில் ஸம்பாதிக்கும் மீன்களைப் பெற, அவன்மேலே கலியாணம் செய்துகொள்ளவும், வீடுகட்டிவைக்கவும், தேகத்தை அலங்காரம் செய்துகொள்ளவும் வேண்டிய சாமக்கிரியைகளைத்தேட ஆரம்பிக்கிறான்.

ஆகவே மூலதனமென்பது வேறு பொருளையுண்டாக்குவதற்கான ஸஹகாரியான பதார்த்தங்கள்தான். முதல் முதல் இம்மூலதனம் உழைப்பாளியின் ஆகார ரூபமாயிருக்கிறது. கொஞ்சகாலத்திற்கு ஆகாரம்வரும்படி சேர்த்துவைப்பது முதல் முதல் மனிதன் செய்யும் காரியம். ஆனால் அது அவ்வளவு ஸுலபமானதல்ல. இதில்லாமல்தான் பலகுடிகள் வருந்துவதுடன் பல ஜனக்கூட்டங்கள் இருக்கும் இடம்தெரியாமல் அழிந்துபோய்விட்டன. நாகரிகமதிகரித்து ஆகாரம்கைகூட, மூலதனமானது மற்றொரு ரூபத்தையெடுத்துக்கொள்கிறது. அதாவது மூலதனமானது வேலைசெய்யவுபயோகமாகும் கருவிகளாக உருக்கொள்கிறது.

வேலையை ஸுலபமாக நடத்திவைப்பதற்குத் தகுந்த கருவி மிகவும் வேண்டிய ஒரு வஸ்து. ஆகாரம் மிகவே, நான் முன்சொல்லியிருக்கும் நிதர்சனத்தில் கண்டபடி, கருவிகள் விருத்தியடைகின்றன. பிறகு நாளாவட்டத்தில் பலவித வேலைப்பாடுகள் உத்பத்தியாக அந்தந்தவேலைக்கு வேண்டிய உபாதனகாரணமான பதார்த்தங்களும் (Materials) மூலதனமென்று அழைக்கப்படுகின்றன. இப்படியாக நாகரிகம் பலத்த ஜனஸங்காதனங்களில் மூலதனம் மூவகைத்தானதாயிருக்கிறது. ஆயினும் நாம் முன்கூறியபடி எல்லாவற்றிற்கும் ஆதியான உழைப்பாளிகள் வேலையை நடத்திவரும்போது உண்டு, உடுத்து அனுபவித்துவரும் பொருள்தான் மூலதனம். மூலதனத்தினால் இன்னமொரு பிரயோஜனமுண்டு. அதாவது, மூலதனம் மிகவும், தனோத்பத்தியும் பலக்கும். எப்படியெனில், ஒருவன் ஒரு தோட்டம் போடுகிறானென்று வைத்துக்கொள்வோம் அவனிடத்தில் மூலதனமில்லாவிட்டால், அல்லது மூலதனம் அல்ப

மாகமாத்திரமிருந்தால் அவன் ஒரு சிறிய குடத்தைச் சம்பாதித்து அதைக் கொண்டு அக்கம்பக்கங்களிலிருக்கும் ஸ்வபாவிகமான ஏரிகளிலிருந்தும், ஆறுகளிலிருந்தும் ஜலத்தைத் தன் தலையில் சுமந்துகொண்டுவந்து கொட்டி தானே போட்டிருக்கும் அல்ப காய்கறிகளை வளர்க்கவேண்டும். பிரயாஸம் அதிகமாயிருப்பதுடன், நடக்கும்வேலையின் பிரமாணம் குறைச்சலாயிருப்பதால் அல்பமான தனோத்பத்திதான் ஆகும் இப்போது, அவனிடம், கொஞ்சம் மூலதனம் கட்டினுல், ஒரு கையேற்றமாவது போடலாம். ஆகவே கொஞ்சம் விலைபதிகம் பெறக்கூடிய பதார்த்தங்களையுண்டாக்கிவைக்கலாம். மேலும் இன்னம்கொஞ்சம் கைமுதல் கூடினுல் எருதுகள் முதலிய கால்நடைகளைக் கொண்டு பெரிய ஏற்றம் வகைராகட்டலாம் கடைசியில் ஏராளமாக மூலதனமிருந்தால், நீராவி யந்திரமொன்றைக் கொண்டு ஸ்திரமாக நீர்வளம் இருக்கும்படி தூரத்திலிருந்து கால்வாய்களையும் அல்லது பூமியின் அந்தர்தேசத்திலிருந்து நீர்ப்பெருக்கையும் ஏற்படுத்திக்கொள்வான். நீர்வளம் மிகவும் நிலவளமும் மிருந்து ஏராளமாக தனோத்பத்தியாகிறது.

இப்படியாக உபயோகமாகும் மூலதனம் ஸ்திரம் அஸ்திரம்என்று இருவகைத்தானது. முற்கூறிய ஸ்திரமான மூலதனம் நெடுகாள் நீடித்து இருக்கக்கூடியது. அது யாதெனில் வேலைக்கு ஸஹகாரியாகவிருந்து உதவும்படி ஏற்படுத்தப்படும் சாலைகள், யந்திரங்கள், கைக்கருவிகள், உத்யம்சாலைக்கும் பண்டங்கள் விற்கப்படும் சந்தைக்கும் இடையே வரத்துப்போக்குக்கு அனுகூலமாகப்போடப்படும் ரஸ்தாக்கள், வண்டி வகைராக்கள், ரெயில் வண்டி முதலிய தேசாந்திரம் போக்கு வரவுக்கு உபயோகமாகும் பலத்த ஏற்பாடுகள், கப்பல்கள் முதலியன. அஸ்திரமான மூலதனம் எவையெனில், வேலை செய்யும் காலத்தில் அதைச்செய்வோர் உண்டு, உடுத்து அத்யாவசியகமாய் அனுபவிக்கும் பதார்த்தங்கள்: அல்லது வேலையில் உபாதன காரணமாக உபயோகமாகும் பண்டங்கள். இதற்கு உதாரணமாக, துணிகள் செய்யும் வேலையில் பிரயோகிக்கப்படும் நூற்கள், நூற்கள் செய்யும் வேலையில் உபயோகமாகும் பஞ்சும், பருத்தியும், பருத்திவிளைவிக்கும் வேலைக்கு வேண்டிய பருத்திக்கொட்டை, எரு முதலியவை. இவைகளுக்கு அஸ்திரமென்று பெயர் வந்ததற்குக் காரணம் அவைகள் கொஞ்சகாலம்கூட ஓரிடத்தில் ஒரு மாதிரியாக இருப்பதில்லை. ஆயினும் நாம் ஸ்திரமென்று அழைக்கப்படும் பொருளும் சாஸ்வதமானதல்ல. எல்லாம் காலத்தைப் பொருத்த விஷயமானது. 4-வருஷம் வரக்கூடிய கருவியை அபேக்ஷித்து 10-வருஷம் வரக்கூடியது ஸ்திரம்; ஆனால் 100-வருஷம் தாட்டக்கூடிய வஸ்துவினபேக்ஷபாக அது அஸ்திரம் தான். ஆகையால் ஒரு பொருளைப்பற்றி உடனே ஸ்திரம் அஸ்திரமென்று சொல்ல முடியாது. ஆகவே மூலதனம் காலத்தை யனுசரித்தது; எந்தப் பொருள் எவ்வளவு காலம் வருகிறதோ அதையபேக்ஷித்து அதற்கு ஸ்திரம், அஸ்திரமென்னும் பெயரைக் கொடுக்க வேண்டியது.

இப்படியான மூலதனம் முதல் முதல் உண்டாவது சேர்த்துவைப்பதினுல், சேர்த்தல் அல்லது செலவிடாமலிருத்தல் அதன் மூல காரணம். சேர்த்தல் என்பதற்கு, ஒரு பதார்த்தத்தைக் கண்ணில் கண்டபொழுதே அழிக்காமல் மற்றொரு ஸமயத்திற்கு வேண்டும்படி பாதுகாத்துவைத்தல் என்று அர்த்தம். இப்படி சேர்க்கப்பட்டிருக்கும் மூலதனத்தை நாம் தனோத்பத்தி செய்வதில் வியாபிருதர்களாக விருக்கும்போது நமது ஜீவனத்திற்காகவாவது மற்றும் வேலை செய்வோரது ஜீவனத்திற்காகவாவது உபயோகித்தால் அந்த மூலதனத்தை ஸார்த்தகப்படுத்தி வைப்போம். இப்படி ஸார்த்தகப்படுத்தி வைப்பதை நாம் மூலதனத்தை விருத்திக்குப் போடுகிறது (Invest the Capital) என்று சொல்வோம்,

## சுகாதார விஷயம்.

## THE WAY TO HEALTH.

## ON PRESERVING OUR EYES.

## நமது கண்களைக் காப்பாற்றும் முறை.

"சர்வஸ்ய காத்ரஸ்ய சிரப்பிரதானம்,
சர்வேந்திரியாணும் நயனம் பிரதானம்,
ஷண்ணும் ரஸாணும் லவணம் பிரதானம்,
பவேந்நதிணுமுதகம் பிரதானம்."

"கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை கொண்டானின்
துன்னிய கேளிர் பிறரில்லை மக்களின்
ஒண்மையவாய்ச் சான்ற பொருளில்லை யீன்றாளின்
மேலன்ன கடவுளுமில்."

என்று காகனாரும் கூறினார். குலமகளுக்கு தன் கணவனைக்காட்டிலும் வேறு பந்துக்களில்லை; பெற்றவளுக்கு தன் குழந்தைகளின் மழலைச் சொற்களைக்காட்டிலும் இனியது வேறு இல்லை; குழந்தைகளுக்கு தமது தாயினும் மேலாகக் கொள்ளத்தக்க அன்புள்ளவர்கள் வேறொருவருமில்லை; அதுபோல நமது தேகத்திலுள்ள உறுப்புகளெல்லாவற்றினும் கண்களே சிறந்தது. இது மூளை, நரம்பு மண்டலமாகிய விரண்டினோடும் ஒன்றாய்ச் சேர்த்து அமைக்கப்பட்டிருப்பது போலவே இரத்த வோட்டத்திற்கும் சம்பந்தப்படுத்தப் பட்டிருக்கிறது. அது மூளையோடு பொருத்தப்பட்டிருப்பதனால், நரம்புத் தடிப்பு, நரம்பு ஒடுக்கம், வேலை செய்தல், இளைப்பாறுதல் முதலிய நரம்பு மண்டலத்திற்குரிய நானாவிதமான தொந்தரவுகளை கண்களும் அனுபவிக்கின்றன. கண் இரத்தவோட்டத்தோடு சம்பந்தப்பட்டிருப்பதனால், நமது தேகத்திற்கு அக்குறைவு நேருப்போதெல்லாம் அதற்கும் தொந்திரவு நேருகிறது.

இந்த முக்கியமான உறுப்பைத் தக்க விதமாய்க் காப்பாற்றும் பொருட்டு கையாட வேண்டிய முறைகள் இன்னதென்று தெரியாமையாலேயே அதன் நிலைமை கெட்டு, சிறுவயதிலேயே பார்வை குறைந்து கண்ணாடிக்காரர்கள் வரவர அதிகரிக்கக் காரணமாயிருக்கிறது. கண்ணாடி போட்டுக்கொள்ளுகிறவர்களைப் பார்த்து அலங்காரத்திற்காகப் போட்டுக்கொள்ளுகிறார்களென்று பொதுவாய்க் கூறுவது பிசகே எனலாம். முக்கியமாய் நமது தேசச்சிறுவர்களுக்கு கண்பார்வை குறைந்து வருவதற்கு சிற்சில காரணங்களைக்கூறி, அவர்கள் அனுசரிக்கவேண்டிய முறைகளையும் ஒருவாறு கூறுவோம்.

(1) குறைவான அல்லது அதிக பிரகாசமான வெளிச்சத்தில் படிக்கவாவது எழுதவாவது நேரும்பொழுது கண்ணை இறுத்து விழித்தல் கெடுதலானது.

(2) அளவுக்கு மேற்பட்டுக் கண்ணைக் கொட்டாமல் விழித்துக் கொண்டிருத்தல் நலமானதன்று.

(3) கண்ணில் எரிச்சல் கண்டபின்பும், பலவீனமான ஸ்திதியிலிருக்கும்பொழுதும், கண்ணிற்கு வேலை கொடுத்தல் பிசகானது.

(4) கண்ணிற்கு எரிச்சல் கொடுக்கும்படியான எண்ணெய் விளக்குகளை உபயோகப்படுத்திக்கொண்டு அளவுக்கு மிஞ்சிப் படித்தலும், எழுதலும் மோசமானது.

(5) தூக்கம் வந்து தள்ளும்பொழுது கவனியாமல் (புகையிலை தூள்) பொடி போட்டுக்கொண்டு விழித்திருத்தல் தப்பிதமானதே.

(1) அந்திப்பொழுது, மாலை வெளிச்சம் குன்றுங்காலையில் வேலை செய்ய முயல்வதும், ஒரு பொருள் கண்ணுக்குச் செவ்வையாகத் தோற்றாவிட்டால் கண்ணை இறுத்து விழிப்பதும் எல்லாவிடத்தும் யாருக்குமுள்ள சுபாவம், தாங்கள் செய்யத்தொடங்கிய வேலையைச் செய்து முடித்துவிட வேண்டுமென்ற

பேரவாவினால் சூரிய அஸ்தமனமான பிறகும் வேலை செய்வதுண்டென்ப துண்மை. இவ்வித செய்கை கெடுதியானதேயன்றி வேறில்லை. இந்த விஷயத்தில் ஒவ்வொரு குடும்பத்திலுள்ள ஆடவரும் பெண்டிரும் கவனிக்க வேண்டியதன்றி, இந்த துர்வழக்கத்திற்கு இடங்கொடாதிருக்கும்படி முயற்சி செய்வது நன்மை. இவ்விதமாகவே இராக்காலங்களில் குறைவான வெளிச்சத்தில் கண்ணை இறுத்து விழித்துச் செய்யத்தக்க எந்த வேலையையும் செய்யாதிருக்க வேண்டியது நமது கடமை.

அப்படியேதேனும் அவசியமாகச் செய்ய வேண்டிய வேலை நேர்ந்தால் பிரகாசமான விளக்கு வெளிச்சத்தைக்கொண்டு சீக்கிரம் முடித்து விடுவது நன்று. தவிர சீக்கிரத்தில் முடியாத வேலையாயிருந்தால் மறுநாள் செய்துக் கொள்ளலாமென்று நிறுத்திவைப்பது உத்தமம்.

(2) அளவுக்கு மேற்பட்டுக் கண்ணைக் கொட்டாமல் விழித்துக் கொண்டிருத்தல், என்பதில் கவனிக்க வேண்டிய விஷயமாவது. வெளிச்சம் வேலைசெய்வதற்குப் போதுமான அளவு இல்லாமலிருக்கையிலும், ஒரு பொருளின்பேரில் அளவுக்கு மிஞ்சி ஆசையுண்டாகும் சமயத்திலும், கண்ணைக் கொட்டாமல் விழித்துக்கொண்டிருக்க நேருகிறது. இப்படி கண்ணுக்கு அதிக வேலையைக்கொடுத்து இளைப்பாற விடாவிட்டால் மறுபடியும் சாத்தியமான அளவு வேலை செய்ய ஏலாது ஆகையால் இவ்விதம் கண்ணுக்கு வேலைகொடுத்து வலியுண்டானால், சிறிது நேரம் படுத்துத் தூங்கவேண்டும். அல்லது கண்ணுக்கு ரமணீயமான மரஞ்செடிகள் நெருங்கிய சிங்காரத் தோட்டங்களுக்குச் சென்று பார்த்து வருவது நலம்.

(3) எரிச்சல் கண்ட பின்னும், பலவீன ஸ்திதியிலும், கண்ணுக்கு வேலை கொடுத்தல், என்பதில் நாம் கவனிக்கவேண்டிய விஷயமாவது. அதிக வேலை செய்வதால் கண்ணுக்கு எரிச்சலுண்டாவதை கவனியாமல் மறுபடியும் வேலை செய்வதாலும் வியாதியால் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும்பொழுது கண்ணுக்கு வேலை வைப்பதாலும், நோய் நீங்கி சௌக்கியமுண்டாகும் சமயத்தில், புஸ்தகங்களைப்படித்தல், எழுதல் முதலிய வேலைகளைச் செய்வதாலும், பெரும்பான்மையும் கண்ணுக்கு ஊனமுண்டாவதுண்டு. ஆகையால் அப்பேர்க்கொத்த சமயங்களில் கண்ணுக்கு யாதொரு கடினவேலையும் கொடாமலிருப்பது உத்தமம்.

(4) தற்காலம் நமது தேசத்தில் அதிக சகாயமான விலைக்கு அகப்படுகிற கிரசின் எண்ணெயை சகலரும் உபயோகப் படுத்துகிறார்கள். இந்த எண்ணெய் நமது தேச இயற்கையமைப்புக்கு சற்றும் பொருந்தாது என்பது நமது துணிபு. இங்கிலாந்து போன்ற அதிக குளிர்ச்சியான தேசத்திற்குத் தகுந்தது. இது மகா உஷ்ணமானது. இது இத்தேசத்தில் அதிக உஷ்ணபாகமாகிய சென்னை ராஜதானிக்கு முற்றிலும் உதவாதது. இந்த எண்ணெய் விளக்குகளை வைத்துக்கொண்டு நமது சிறுவர்கள் படிப்பதும் எழுதுவதும் அபாயகரமானதென்றே கூறலாம். அதிலும் அதிக விலை கொடுத்து வாங்க சக்தியில்லாத பலர், மேல் கண்ணுடியே இல்லாததும், கண்ணுடியிருந்தும் புகைமேலே கிளம்பி நாற்றத்தை வீசக்கூடியதுமான கிரசின் எண்ணெய் விளக்குகளை உபயோகிக்கிறார்கள். இவர்கள் பொழுது விடிந்து படுக்கையை விட்டு எழுந்து, வெளியே வரும்பொழுது கண், காது, செவியாகிய உறுப்புகளை துடைத்துப்பார்த்தால், கிரசின் எண்ணெய்ப் புகைச்சலைக் கண்ணுற்று உடனே அவ்வெண்ணெயை உபயோகிப்பதை நிறுத்தி விடுவார்களென்பதில் தடையில்லை. இந்த எண்ணெயை உபயோகிக்கிறவர்களுக்குத் தலைவலி, பித்தவாந்தி முதலியவைகள் சர்வ சாதாரணமாயிருக்கும். கண்களுக்கும் அதிக கெடுதலானதே.

ஆகையால் தங்கள் திருஷ்டி குறையாமலிருக்க எண்ணமுள்ளவர்கள் 'கிரசின்' எண்ணெயை உபயோகிக்காமலிருப்பதே நலம்.

(5) சிலர், நாடகம், ஆட்டம், கூத்து முதலியவைகளுக்குச் சென்று இரவு பன்னிரண்டு மணி கழிந்து இரண்டு மணி வரையில் கண் விழிக்கிறார்கள். அச்சமயத்தில் இவர்களுக்குத் தூக்கம் வந்து தள்ளினாலும், கண்ணெரிச்சலுண்டானாலும் கவனியார்கள். தூக்கம் வருத்துகிறதே என்ற எண்ணத்தால் பொடியைப் போட்டுக்கொண்டு நாடகம் முதலியவைகளைப் பார்த்துவிட்டு வந்து மறுநாட் காலை எட்டொன்பது மணிவரையில் தூங்குவார்கள். இவ்விதமாய் கண்ணுக்கு கொடிய வருத்தத்தைக் கொடுப்பதும் கெடுதலானதே.

கண்ணுக்கு செய்யக்கூடாதவைகளைக் கூறிவிட்டபடியால் செய்யவேண்டியவைகளை ஒருவாறு கூறுவாம்.

கல்கத்தாவைச்சேர்ந்த சில ஆயுர்வேத வைத்தியர்கள் ஒவ்வொருவரும் காலையில் படுக்கையை விட்டு எழுந்தவுடன் குளிர்ந்த ஜலத்தினால் கண்ணைத்துடைத்துக்கொள்ளுவது நலமென்கிறார்கள். இதுவும் அவ்வளவாக சரியானதென்று கூறமுடியவில்லை. அதிக குளிர்ச்சியானஜலத்தினால் எழுந்தவுடன் கண்ணைத் துடைத்துக் கொள்ளுவதும் சில சமயங்களில் கெடுதலையே உண்டாக்குகிறது. ஆகையால் அதிக குளிர்ச்சியும் சூடுமில்லாத சாதாரணமான ஜலத்தைக் கொண்டு கண்ணைத் துடைத்துக் கொள்ளுவதுடன், வாயில் ஜலத்தைவிட்டு நாக்கைவழித்து, முகத்தையும் கழுவிக் கொள்ளுவது நலம்.

தலைக்கு எண்ணெய் தேய்த்துக்கொண்டு ஸ்நானஞ்செய்வதாயிருந்தால், சிலர் கண்ணுக்குள் எண்ணெயை விட்டுத்தேய்ப்ப துண்டு. இது நமது அனுபோகத்தில் நன்மை பயப்பதாகத் தோற்றவில்லை. எண்ணெய் சுயமானதாகவில்லாவிட்டால் கண் பொங்கிக்கொண்டு வருத்தத்தைக் கொடுக்கிறது. தவிர, கண் என்பது ஒரு நீரேயல்லாமல் மற்றப்படியன்று; அதிக மெல்லியதான உறுப்பு. இதில் எவ்விதமான வஸ்துக்களையும் இடக்கூடாதென்பது பல ஐரோப்பிய வைத்தியசாஸ்திரிகளுடைய கருத்து. அப்படி கண்ணுக்குள் எண்ணெய் முதலியவைகளை இடுவதால் கண் வரவர சிறுத்துக்கொண்டேவருமென்பதில் தடையில்லை. ஆகையால் தலையுச்சியில் சுயமான எண்ணெயைத் தேய்ப்பதும் உள்ளங்காலில் எண்ணெயை இட்டுத்தேய்ப்பதுமே மகாசிரேஷ்டமானது. உள்ளங்காலுக்கும் கண்ணுக்கும் நெருங்கிய இரத்தவோட்டசம்பந்தங்கள் இருப்பதாக பெரியோர் சொல்லுகிறார்கள். அக்காரணத்தினாலேயே உள்ளங்கால், நடக்கும்பொழுது தரையில்படாதபடி உள்ளமைந்திருப்பதாகவும் சொல்லுகிறார்கள், ஆகையால் உள்ளங்காலில் எண்ணெயைவிட்டுத் தேய்ப்பதால் கண்ணுக்கு வெகு நன்மையுண்டாகும். தவிர, காதில் எண்ணெயை விடுவதும் கண்ணுக்கு அனுகூலமானதென்று சிலர் கூறுவதுண்டு.

தவிர, கண்ணுக்குப் பச்சையான மரம்செடிகளடர்ந்த சிங்காரத் தோட்டங்களை அடிக்கடி பார்த்துக்கொண்டு வருவதால் அதிக நன்மையுண்டாகும். பச்சையான பொருள்களைப்பார்ப்பதால் கண்ணுக்குக் குளிர்ச்சி யுண்டாகும். இக்காரணத்தினாலன்றோ ஐரோப்பியர் அணிந்துக்கொள்ளும் டொப்பியின் அடிப்புறத்தில் பச்சை நிறமுள்ள துணிகளைவைத்து தைப்பதும், பிடித்துக்கொள்ளும் குடையின் அடிப்புறத்தில் போடுகிறதும் வழக்கமாயிருக்கிறது.

இத்தியாதி விஷயங்களை ஒவ்வொருவரும் செவ்வையாய்க் கவனித்துக் கண்ணைக் காப்பார்களென நம்பி வரையலானோம்.



THE LATE Mr. G SUBRAHMANIA IYER.

காலஞ்சென்ற ஸ்ரீ ஜி சுப்ரமணிய ஐயர்.

சென்னையில் ஹிந்து, சுதேசமித்திரன் பத்திரிகைகளை ஸ்தாபித்துப் பொதுவிஷயங்களில் சிரத்தைபூண்டுழைத்துப் பேரும் புகழும் பெற்ற ஸ்ரீமான் ஜி. சுப்ரமணிய ஐயர் அவர்கள் நாளது ஏப்ரல்மீ 18உ செவ்வாய்க்கிழமையன்று மாலை ஆறேகால் மணிக்கு திருவல்லிக்கேணியிலுள்ள அவருடைய கிருகத்தில் பரமகதியடைந்தார். இவர் 1855-ம் வருஷத்திற் பிறந்தவர். முதலில் திருவல்லிக்கேணி ஹிந்துஹைஸ்கூலில் உபாத்தியாயராயிருந்து பிறகு ஹிந்து பத்திரிகை சம்பந்தமாய் உழைக்கவென்று அவ்வேலையைவிட்டு நீங்கினார். லார்ட் லிட்டன் ஸ்வபாஷா பத்திரிகைகளுக்கிட்ட வாய்ப்பூட்டு லார்ட் ரிப்பன் அரசர்பிரதிநிதியாக வந்ததும் தரிக்கப்படவே அவர் "சுதேசமித்திரன்" என்னும் தமிழ்ப்பத்திரிகையை ஸ்தாபித்தார். அப்பத்திரிகையை நடத்துவதில் அவருக்கு உதவியாக அமர்ந்து 1885-ம் வருஷம் முதல் 10-வருஷத்துக்கு அவ்வேலையிலிருந்துழைத்துத்தேறி அதன்பின் விவேகசிந்தாமணி கைசோர்ந்து போகாதபடி பார்க்கவேண்டி அவ்வேலையையும் விட்டு இதற்கே உழைத்து வரத்தீர்மானித்தோம். சுதேசமித்திரனை விட்டுப்பிரிந்த பரிவற்றாது பல வருஷம் வருந்தினோமாயினும், விவேகசிந்தாமணியும் அவருடைய வாக்குச்சகாயத்தைக்கொண்டே யேற்படுத்தப் பெற்றதை யுன்னி அவரிடத்து வைத்த வித்யாகுருபக்தி குறையாதுழைத்து வந்தோம். அவருடைய குணவிசேஷங்களைப்பற்றி பத்திரிகை வாசிப்போர் எல்லாருக்கும் அனேகமாய்த் தெரியுமாதலால் இங்கே விவரிக்கவில்லை. அவரைப்போல தேசாபிமானிகள் சித்திப்பது துர்லபம். தேசாபிமானந்தான் அவரைப்பற்றிய கொடுநோயின் வேகத்தையும் வென்று கடைசிவரையில் அவர் அதைப்பாராட்டாது தானே நடமாடி வரச்செய்தது.

லாலி கவர்ன்மெண்டு அவருக்கிழைத்த தீங்கு ஜனங்கள் மனதில் மிகவும் உறுத்தினதன்றி அதுமுதல் தேசாபிமானம் பாராட்டுதல் ஆபத்துக்கு இடமானது என்றும் உணர்ந்து அஞ்சத்துவக்கினார்களென்பது உற்றுணர்ந்துள்நோக்கி யுண்மை யுணரக் கற்றவர்களுக்குப் பிரத்தியக்ஷமாய்த் தோன்றியது. பிறகு போலித் தேசாபிமானம் தலையெடுக்கலாயிற்று. "தந்தலையாட்டம் தலைக்குமேலே" யென்கிறபடி ஒவ்வொருவரும் ஜன சிரேஷ்டராக நடிக்கப் புறப்பட்டார்கள். "எல்லாரும் பல்லக்கேறினால் தூக்குவதற்கு ஆள் எங்கே" யென்கிறபடி ஒவ்வொருவரும் ஜனசிரேஷ்டராய்விளங்கியபொழுது ஜனசமஷ்டிபாவத்துக்கு சிரேஷ்டம் குறைந்து பின்னப்படலாயிற்று. யார் எப்படிப்போனாலும் காலஞ்சென்றவர் மட்டும் தேசாபிமானம் குன்றாது கடைசிவரையில் தேசத்துக்குழைத்து வருவதையே நோன்பாகக்கொண்ட விரதம் தப்பாது தம் காலத்தைத் தள்ளிக்கொண்டு போய்விட்டார். "அவரைப்போல் வாழ்ந்தாருமில்லை: தாழ்ந்தாருமில்லை." இதுதான் இன்றைக்கு அவரைப்பற்றி எல்லாரும் சொல்லும் பொதுஜன வாக்காக விருக்கிறது.

ஏப்ரல்மீ 28உ பச்சையப்பன் மாளிகையில் கூடிய பொதுக் கூட்டத்தில் அவருடைய ஞாபக சின்னார்த்தம் ஒரு புஸ்தகசாலையும் கட்டடமுமாவது அவர் திரு உருவச் சிலையாவது இரண்டில் ஒன்று சேகரமாகும் தனத்துக்குத் தக்கபடி நிர்மிக்கத் தீர்மானித்திருக்கிறார்கள்.

## SONGS.

## பாட்டுகள்.

### தாலாட்டு.

"ஆராரோ ஆராரோ ஆராரடித்தாரோ?
ஆரடித்து நீ அழுருப் அஞ்சனக்கண் மைசரைய என்?
கண்ணுன கண்ணே! என் கண்குளிர்ந்த மாம்பழமே!
தின்னுப்பழமே! திகட்டாத செந்தேனே!—என்
ஈச்சம்பழமே! இனித்திருக்கும் தீங்கனியே!
வாழைக்கனியே! வரிக்கண் பலாச்சுளேயே!—என்
அடிக்கரும்பே! செந்நெல்லே! ஆடையின்கீழ் [நற்பாலே!
குடிக்குநல்ல குஞ்சரமே! கோதண்டபாணிபனே! [என்
கண்ணுன கண்ணுற்குக் கண்ணூறுவாராதே
சுண்ணும்புமஞ்சளுமாய்ச் சுற்றிபெறி கண்ணுற்கு!
விபூதி வேப்பிலேயும் வீசிபெறி கண்ணுற்கு-என்
கண்ணே யடித்தவர்யார், கற்பகத்தைத் தொட்டவர் [யார்?
பொன்னேயடித்தவர்யார், பூங்கிளியைத் தொட்ட [வர்யார்?
ஆராரோ ஆராரோ ஆரார் அடித்தாரோ?
ஆரடித்து நீயழுருய், அடித்தாரைச் சொல்லியழு"

—*From our Review of Muttu Meenakshi.*

## ஔவை தனிப்பாடல்.

### இனிது.

இனிது இனிது ஏகாந்த மினிது
அதனினு மினிது ஆதியைத் தொழுதல்
அதனினு மினிது அறிவினர்ச் சேர்தல்
அதனினு மினிது அறிவுள் ளோரைக்
கனவிலு நனவிலுங் காண்பது தானே.

### அரிது.

அரிதரிது மானிட ராத லரிது
மானிட ராயினுங் கூன்குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்த லரிது
பேடு நீங்கிப் பிறந்த காலேயும்
ஞானமுங் கல்வியு நயத்த லரிது
ஞானமுங் கல்வியு நயத்த காலேயும்
தானமுந் தவமுந் தான்செய லரிது
தானமுந் தவமுந் தான் செய்வ ராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே.

## "HINDU FASTS AND FESTIVITIES."

## இந்து புண்ணிய கதைகள்.

நமது விரதங்கள் பண்டிகைகள் சம்பந்தப்பட்ட விஷயங்களை இப்புஸ்தகத்தில் எல்லோரும் வாசித்துத் தெரிந்து கொள்ளும் மாதிரியாய் மைலாப்பூரிலிருக்கும் ஆர்கியலாஜிகல் இலாகா ஜெகதீசய்யர் அவர்கள் வெளியிட்டிருக்கிறார். இதில் முதலில் இந்துக்களின் பெருமை, இந்தியா புண்ணிய பூமி என்கிற விஷயம், கோயில், ஸ்நானம் இவைகளின் பிரயோசனம் இவைகளைப்பற்றிச் சொல்லிப் பிறகு ஒவ்வொரு புண்ணிய தினங்களிலும் நாம் கொண்டாட வேண்டிய தெய்வத்தின் பெருமை, அது சம்பந்தமாய் அந்தந்த விரதங்கள் உண்டானதின் காரணத்தைக் காட்டும் கதைகள் இவைகளையும் தெரிவித்து கடைசியாக அந்தந்த விரதத்தின் முக்கிய தெய்வத்தை விசேஷமாய்க் கொண்டாடும் கோயில்களும் குறிப்பிடப் பட்டிருக்கின்றன. மேலும் சில படங்களும் சாஸ்திரப் பிரகாரம் அந்தந்த தெய்வம் இப்பூலோகத்தில் ஆவிர்பவித்த காரணத்தைக் குறிக்கும்படிக்காக தயாரித்துச் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இதற்கு ஹைகோர்ட் ஜட்ஜ கனம் மிஸ்டர் சேஷகிரி அய்யர் அவர்கள் ஓர்முகவுரை யெழுதியிருக்கிறார்.

## "HINDU COOKERY AND HOUSE-WIFERY."

## இந்துபாக சாஸ்திரம்.

இதில் நமது பாகசாஸ்திர விஷயமும் ஸ்திரீ ஒழுக்கமும் சுலபமாய் எல்லா பெண் குழந்தைகளும் தெரிந்து கொள்ளும்படி தமிழ் பாஷையில் ஜெகதீசய்யர் வெளியிட்டிருக்கிறார். இதற்கு ஸர். எஸ். சுப்பிரமணிய அய்யர் அவர்கள், இது எல்லா பெண் பிள்ளைகளுக்கும் முக்கிய மென்று முகவுரை எழுதியிருக்கிறார்.

இதில் அடங்கிய விஷயங்கள் நளமகாராஜனால் எழுதப்பட்ட கிரந்த புஸ்தகத்திலிருந்து எடுத்து மொழிபெயர்க்கப்பட்டதாகவும் இன்னும் மற்றய அபூர்வ கிரந்தகங்களிலிருந்தும் எடுத்து எழுதப்பட்டதாகவும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. வருஷம் முழுவதும் அந்தந்தக் காலங்களில் சாப்பிட வேண்டிய ஆகாரங்கள், சமையல் பதார்த்தங்களின் குணங்கள், பால், தயிர், தண்ணீர் இவைகளின் வைத்திய பக்குவம் முதலியனவும் தெளிவாய் எழுதப்பட்டிருக்கின்றன.